இதே நோக்கத்திற்காக போராட மக்கள் ஜனநாயக நாடுகளும் ஒன்று வந்தன. அவைகளிடையே நெருக்கமான பொருளாதார ஒத்துழைப்பு தாராளமாக ஏற்பட்டிருந்தது. தொழில் துறையில் மாபெரும் சக்தியாக சோ.யூ. வளர்ந்ததால்தான் தொழில் துறையில் பலவீனமாயுள்ள மற்ற ஜனநாயக நாடுகளுக்கு உதவிசெய்யும் நிலையில் உள்ளதால்தான் புதிய ஜனநாயக உலக மார்க்கெட் உதயமாவது சாத்தியமாயிற்று ** பொறுப்பாளிகள்:- புதிய ஜனநாயக உலக மார்க்கெட் உலகின் உருவானதற்குக் காரணம் அமெரிக்கா, பிரிட்டன், பிரான்ஸ் போன்ற ஏகாதிபத்திய தேசங்கள் அனுசரித்துவரும் கொள்கைதான் காரணம் என நாம் குறிப்பிடுகிறோம். சோ.யூ. வையும், சீனாவையும், கி.ஜெ. நாடுகளையும், வியாபாரம் செய்வதைத் தடை செய்து பொருளாதார நெருக்கடியை ஏற்படுத்துவதற்குப் பொறுப்பாளிகளாக உள்ளவை ஏகாதிபத்திய நாடுகள், போர்யாக யுத்தம் முடிந்த பின் அமெரிக்க ஏகாதிபத்தியம் ஜனநாயக முகாமைத் தனித்து ஒதுக்க நடவடிக்கைகளை எடுத்தது. யுத்தத்தில் தோற்ற தேசங்களான ஜப்பான், மேற்கு ஜெர்மனி, இத்தாலி, ஆகிய தேசங்களையும், பிரிட்டன், பிரான்ஸ், பெல்ஜியம், நார்வே ஆகிய தேசங்களை சோ.யூ. வுடனும் மற்ற ஜனநாயக தேசங்களுடனும் வியாபாரத் தொடர்புகள் வைத்துக் கொள்ளக்கூடாதென நிர்ப்பந்தப் படுத்தியது. இன் இந்த கொள்கையை கையாண்டவர்களுக்கே நேர் எதிராகச் சென்றது. இந்த நாடுகளுடன் ஜனநாயக நாடுகளுக்கு இருந்த தொடர்பு அறுபட்டதால் ஏகாதிபத்திய முகாமின் பொருளாதார நெருக்கடிதான் அதிகரித்துள்ளது. இதற்கு நேர்மாறாக சோ.யூ.வின் தலைமையிலுள்ள ஜனநாயக முகாமின் பொருளாதாரம் மேலும் ஸ்திரப்பட்டு, பொருளாதார நெருக்கடி என்பதே இல்லாமல் மக்களின் சுபிட்ச வாழ்வை வளம்பெறச் செய்வதில் முன்னேறி வருகிறது. ** ஜனநாயக மார்க்கெட்டின் வளர்ச்சி: ஜனநாயக முகாமின் பொருளாதாரச் சாதனைகள் மகத்தானவை. தொழில் துறையிலும், விவசாயத் துறையிலும் இத் தேசங்கள் ஜனநாயக அமைப்பின் கீழ் மிகவும் பெரிய அளவு முன்னேறியுள்ளன. 1951லேயே சோ.யூ.வின் தொழில் உற்பத்தி யுத்தத்திற்கு முன்னிருந்ததைவிட 100 சதவிகிதம் அதிகரித்துள்ளது. போலந்தின் தொழில் உற்பத்தி யுத்தத்திற்கு முன்னிருந்ததைவிட 190 சதவிகிதமும், செக்கோஸ்லோவேகியாவின் உற்பத்தி 70 சதவிகிதமும், ஹங்கேரியின் உற்பத்தி 90 சதவிகிதமும், பல்கேரியாவின் உற்பத்தி 360 சதவிகிதமும், அல்பேனியாவின் உற்பத்தி 400 சதவிகிதமும், அதிகரித்துள்ளது. கி. ஜெர்மனியான ஜெர்மன் ஜனநாயகக் குடியரசின் தொழில் உற்பத்தி 1951ல் யுத்தத்திற்கு முன்னிருந்ததைவிட 36 சதவிகிதம் உயர்ந்துள்ளது * 1952ம் வருஷத்திய சோ.யூ.வின் தானிய உற்பத்தி 13 கோடி டன். 1951 வருஷத்திய பல்கேரியாவின் தானிய உற்பத்தி யுத்தத்திற்கு முன்னிருந்ததைவிட 50 சதவிகிதம் அதிகம், ஹங்கேரியின் உற்பத்தி 25 சதவிகிதம். சீனாவின் உற்பத்தியோ விடுதலை அடைவதற்கு முன்னிருந்ததைவிட 1952ல் தானியம் 9 சதவிகிதமும், பஞ்சு 55 சதவிகிதமும், சணல் 459 சதமும், புகையிலை 194 சதமும், சக்கரை 13 சதமும் அதிகரித்துள்ளது. சீனாவின் தொழில் உற்பத்தியை எடுத்துக் கொண்டால் இரும்பு 55 சதவிகிதமும், சிமெண்ட் 48 சதவிகிதமும், பெட்ரோல் எண்ணெய் 36 சதவிகிதமும் உயர்ந்துள்ளது. ** விநியோகிப்பதில் தடையில்லை:- ஒவ்வொரு நாட்டின் நாள் தோறும் அதிகரித்துவரும் உற்பத்தியை விநியோகம் செய்வதில் ஜனநாயக மார்க்கெட்டில் எவ்வித கஷ்டமுமில்லை. ஏனெனில் ஒரு தேசத்தின் அதிக உற்பத்தி மற்றொரு தேசத்தின் தேவையை பூர்த்தி செய்யக் கூடியதாகத் திட்டமிடப்படுகிறது. இன்று அமெரிக்காவும் மற்ற ஏகாதிபத்திய நாடுகளும் செய்வது போல் ஒரு தேசத்தின் அதிக உற்பத்தியை எப்படியாவது மற்றொரு தேசத்தில் கொண்டு சென்று குவித்து விற்றாக வேண்டும் என்ற நிலைமை இல்லை. ஒவ்வொரு தேசத்தின் வளர்ச்சியையும் சுபிட்சத்தையும் அடிப்படையாக கொண்டு வியாபாரம் நடப்பதால், ஜனநாயக முகாமிலுள்ள எல்லா தேசங்களிலும் வியாபாரம் வளர்ந்து வருகிறது. 1948-லிருந்து 1952 வரை ஜனநாயக முகாமின் மொத்த வியாபாரம் மூன்று மடங்கு அதிகரித்துள்ளது. இது உலகச் சரித்திரத்திலேயே புதுமையான சம்பவமாகும் ***. வியாபார வளர்ச்சி:- சோ.யூ.வின் அன்னிய வியாபாரம் யுத்தத்திற்கு முன்னிருந்ததைவிட மூன்று மடங்கு அதிகரித்துள்ளது.